# ஆன்மபோதம்

(கலிவெண்பா)



பகவான் ஸ்ரீரமணமஹர்ஷிகள்
அருளியது




ஸ்ரீ நிரஞ்ஜனாநந்தசுவாமிகளால்
பிரசுரிக்கப்பெற்றது
1948

 [விலை 2 அணா

# நான்முகம்

ஆசார்ய ஸ்ரீசங்கரபகவத்பாதர், முமுக்ஷுக்கள் எளிதில் ஓதியுணர்ந்துய்யுமாறு, ஆன்மதத்வத்தை விளக்கிக் கூறியுள்ள ஆத்மபோதம் என்னும் வடமொழிப் பிரகரணக்கிரந்தம், பகவான் ஸ்ரீரமண மஹர்ஷிகளால், பக்தர்கள் பாராயண சௌகரியத்தின்பொருட்டு இனிய தமிழிற் கலிவெண்பாவாக்கப் பெற்றது இந்நூல். கிடைத்தற்கரிய இவ்வருணூலை அன்பர்கள் உய்த்துணர்ந்து கிருதகிருத்யராவராக.

பிரசுரகர்த்தா



பகவான் ஸ்ரீரமண மஹர்ஷிகள்

உ

# ஆன்மபோதம்

---

## கலிவெண்பா

ஆன்மாவின் போதமரு ளாசாருஞ் சங்கரனவ்
வான்மாவுக் கன்னிய னவனே - வான்மாவா
யென்னகத் தேயிருந் தின்று தமிழ் சொல்வானு
மன்னவ னன்றிமற் றருளர் - முன்னற்
றவங்களினுற் பாவந் தவிர்ந்தவராய்ச் சாந்தி
யவிர்ந்தவரர் யாசையறுந் தாரராய்ப் - பவமுக்தி
யாதரமார்ந் தாருக் கடையத் தகும்ஆன்ம
போதமா மீது புகலாகு - மோதிவ்
வறிவொன்றே நேர்முக்தி சாதன மாகும்
பிறசா தனங்களின் பேறு - மறிவின்றி
யாகாது முக்தியுற லக்கினியின் றிப்பாக
மாகாத வாறென் றறிவாய்நீ - மோக

வறியாமைக் குப்பகை யன்றதனாற் கன்ம
மறியாமை தன்னை யகற்று - தறிவே
யழிக்குமறி யாமையொளி யந்தகா ரக்கும்
பொழிக்குமா றென்றே யுணர்வாய் - முழுது
மறியாமை யான்மறை வானதுபோ லான்மா
வறவேயஃ தேகம் தாகி - நிறைவா
யிலகுமே தானு யிரியவே மேக
மிலகுமா தித்தனென வேநன் - குலகி
லறியாமை யாங்கலக்க மாருமுயிர் தூய்தா
மறிவுப் பயிற்சியி னலவ் - வறிவு
மகற்றியறி யாமை யழியுமே நீர்மா
சகற்றுந்தேற் றம்பொடியொப் பாய்த்தன் - னகத்து
விருப்புவெறுப் பாதி விகாரசம் சாரத்
திருப்புங் கனவுக் கிணையஃ - துருப்படும்
போதுமெய் போலப் பொலியுமே போதமுத்தி
போததுவும் பொய்யாகிப் போம்பின்னர்க் - கேதமிலை
யெவ்வளவு காலமெவைக்குமதிட் டானமா
மவ்விய மாம்பிரம மாய்ந்தறித - லொவ்விடா

தத்துவேணக் கால மகிலமுமெய் யாய்த்தோன் றுஞ்
சுத்திவெள்ளி போலத் துணிவாய்நீ - மொத்த
முதற்கா ரணமாய் முழுதினு தார
மதுவாம் பரேச னகத்தே - யுததி
யுதிகுமிழி கள்போ லுலகங்க ளெல்லா
முதித்திருந் தோயு முணர்வாய் - முதலவன்
சச்சிதா னந்தன் சகலத்து முள்ளுள்ளா
னிச்சனும் விஷ்ணு நிலேதன்னிற் - சொச்சமாம்
பொன்னிற் கடகாதி போலும்பல் தோற்றமெலா
மன்னிய மன்றென் றறிமுற்று - மன்னனுறும்
விண்ணிலே போல விளங்கீச னிற்றோன் று
மெண்ணி லுபாதி யிசைந்தவிபு - வண்ணனுமப்
பேத வுபாதிகளாற் பின்னன்போல் வானவை
போதலும் பூன்றப் பொருளாவா - ஞேதும்
பலவா முயாதிகள் பற்றியே நாமங்
குலமா சிரமமுதற் கொள்கை - சலத்திற்
சுவைநிற மாதிபோற் சுத்தவான் மாவி
லவைகற் பிதமா மறிக - கவையாய்க்

கலந்தபெரு மைம்பூத காரிய மாகுங்
கலந்தவினை சார்ந்த கலமாங் - கலக்கு
மிடரின்ப போக மெவையும் புசித்தற்
கிடமிவ் வுடலென் றிருப்பா - யுடலுள்ளே
வாயுக்க ளைந்து மனம்புத்தி யீரைந்தா
மேயுங் கருவிக ளேய்ந்தநுண் - காயங்
கலவாத நுண்பூத காரியமாம் போகத்
துலவாத சாதனமா மோர்வாய் - மலமாகி
யாதியற் றிற்றென் றறையொணு வஞ்ஞான
மோதுவ ராதி யுபாதியா - யோது
முபாதிக ளாமூன் றுடல்களின் வேறு
யுபாதியி லான்மாவை யோரவ் - வுபாதிகளாங்
கோசங்க ளைந்துமுதற் கூட்டுறவா லான்மாவு
மாசிலதே யாயினுமவ் வம்மயனே - நேசருவு
நீலபடா திக்கலப்பா னிர்மல மாம்படிகம்
போலவே யொட்டாப் பொருளாகு - மேலி
லுடற்பஞ்ச கோச வுமியாதி யோடெட்
சுடர்பரி சுத்தவான் மாவைத் - திடமான

வுத்தியினுற் குத்தி யொழித்தவற் றையரிசி
யொத்தறிய வேண்டு முணருள்ளே - யொத்ததா
யெங்குமே யென்று மிருப்பினு மான்மாவு
மெங்குமே யான்மா விலகலில - துங்கமாம்
புத்தியி லேயே பொலியுநிழல் சொச்சமாம்
வத்துவிற் றேன்றும் வகையாகத் - தொத்து
முடல்கருவி யுள்ள மொடுபுத்தி மாயை
விடவே றவற்றின் விருத்தி - யுடனே
யெவைக்குமே சாட்சியா மென்றுமான் மாவை
யவைக்கரசன் போல வறிக - செவிமுன்
கருவி களின்றொழில் கண்டவவி வேகி
கருத்தன்போன் றன்மாவைக் காண்பன் - றுரிதமா
யோடுமே கங்கண் டுணர்விலி சந்திரனே
யோடுகிறு னென்பதை யொத்ததஃ - தீடில்லா
ஞானவொளி யான்மாவை நண்ணி யுடல்பொறிகண்
மானதம் புத்தியிவை மன்னுதமக் - கான்தொழி
லாற்றிடுமா தித்த னவிரொளியான் மக்கடொழி
லாற்றுவது போலு மறிமெய்போற் - றேற்றமுறுந்

தேகம் பொறிக டிகழ்குணங் கள்வினைக
ளாகுமிவை தூயசச்சி தான்மாவில் - மோகத்தாற்
கற்பிப்பர் சுத்த ககனத்தி னீலமுதற்
கற்பித்தல் போலக் கருதுக - வற்ப
மனமா முபாதி மருவுகர்த் தத்வ
வினமாய வற்றையறி வின்மை - யெனுமயலா
லான்மாவிற் கற்பிப்ப ரப்பலைவை நீர்தோன்றும்
வான்மதியிற் கற்பிக்கு மாறுபல் - பான்மை
விருப்பாசை துன்பின்பு மேலுமிவை போல்வ
விருப்பவாம் புத்தி யிருப்பு மிருப்பில்லாத்
தூக்கத்தி லின்றதனுற் பொருந்தமனுவு புந்திக்கே
யோர்க்குகவான் மாவிற்கா மோவெனவே - பார்க்கு
மருக்கன் றனக்கொளி யப்புக்குத் தட்ப
மெரிக்குட் டணமு மியல்பா - மிருக்கையெனச்
சத்துச்சித் தானந்தஞ் சார்நித்தஞ் சுத்தமியல்
பெர்த்ததான் மாவுக்கென் றோரைந்தா - மத்தகையுட்
சத்துச்சித் தென்னத் தகுமான்ம வம்சமும்
புத்தி விருத்தி புகலொன்று - மொத்த

விரண்டோடு மூடத்தால் யான
ஞெருத்தன் ஞெழிற்படுவ ஞர்வா - யொருவிதத்து
மென்றும் விகார மிலதான்மா புத்தியு
மென்றுமறி வின்றியதே யென்றுஞ் - மொன்றிய
சீவனே யெல்லாந் தெரிவான்செய் வான்காண்பான்
பாவத்தான் மாமோகி பார்சத்தாய்- மேவுறுந்
தன்னைத்தான் சீவனெனத் தாம்பிலே பாம்புபோ
லுன்னியே யச்ச முறுகின்றான் - றன்னைத்தான்
சீவனலன் யான்பரமான் மாவென்று தேர்ந்ததனு
லாவனஞ் சாறு யவனுமி - மேவு
மொருபொருளா மான்மா வொளிர்க்கு மதிமுன்
கருவிகளைத் தீபம்போலே - பெருவ
வொளியி லவற்று லொளிர்படுமான்மா
வொளிர்க்கப் படாதென் றுணர்வா - யொளியார்
விளக்கி னுருவை விளக்கிட வேறு
விளக்கை விரும்பா விதம்போல் - விளங்கு
மறிவுருவா மான்மா வறிந்திடத் தன்னைப்
பிறிதறிவு வேண்டப் பெறுது - பிறிதவை

நேதிநேதி வாக்கினு னீக்கி யுபர்தியெலா
மீதியாஞ் சீவான்மா மீதிலா - வாதியா
மப்பரமான் மாக்களி னைக்கியமா வாக்கியங்கள்
செப்புவ் தோர்ந்து தெளிந்திடுக - வப்பொய்
யவித்தையா லானவை யாகமுதற் காணு
மிவைகுமிழி போலவழி வெய்து - மிவற்றி
னயலா மழல வகம்பிரம மாமென்
றயராம லென்று மறியா - னுயிரி
லுடலுக்கு வேறெனக் குண்டா தன் மூத்த
-லொடுகுன்றல் சாவுமுத லொன்று - படர்ந்த
வொலிமுற் புலன்களோ டொன்றலெனக் கின்றே
யலன்பொறிகள் யானுத லாலே - சலன
மனமலனு னுதலான் மன்னு துய ராசை
சினமச்ச மாதியெனைச் சேரா - வினமாக
வப்பிரா ணன்மனமில் லான்சுத்த னென்றுமறை
செப்புகின்ற தன்றோ தெளிபலவா - மப்பெயர்க்
னிர்க்குணனி ரஞ்சன னித்த னிராகார
னிர்விகா ரன்சுத்த னிட்கிரிய - னிர்விகற்ப

னித்தமுக் தன்முன் னிகழ்த்திடப் பட்டவை
யத்தனையு நானென் றறிபரி - சுத்தமா
மாகாயம் போல வகிலத்தி னுள்வெளியான்
சாகர்தான் சர்வ சமன்சித்தன் - றேகாதி
யாவற்றும் பற்றற்ற னென்றுமம லன்சலியா
னுவனு னென்றே யறியது - வாவை
யெதுநித்தஞ் சுத்த மெதுமுக்த மேக
மெதகண்ட வின்பிரண் டில்ல - தெதுசத்துச்
சித்தனந்த மாகுந் திகழப் பரப்பிரம
வத்துயா னேயா மதித்திரு - நித்த
நிரந்தரமிவ் வாறு நிகழ்த்தப் படுமப்
பிரமமே யானுவ னென்னு - முறுதி
யழிக்குமறி யாமை யலைவுகளை நோய்க
ளொழிக்குமிர சாயன மொத்து - விழுப்பமா
மேகாந்த தேசத் திருந்தாசை யின்றிவெளி
போகாது வென்று பொறிகளை - யேகமா
யந்தமி லான்மாவை யன்னியமில் புந்தியனுய்ச்
சிந்திக்க வேண்டுந் தெரியிங்ஙன் - சிந்திக்கும்

புத்திமான் காணும் பொருளெவையு மான்மாவிற்
புத்தியா லொன்றல் புரிவித்தே - சுத்தமாம்
விண்ணென வொன்ருய் விளங்கிடு மான்மாவை
யெண்ணுக வெப்போது மேயிவ்வா - றெண்ணியே
யுள்ள துணர்ந்தோ னுருவம் வருணமுத
லுள்ள மயல்க ளொருங்கொழித் - துள்ளந்
திகழ்பரி பூன்ற சிதானந்தந் தானுத்
திகழ்ந்திடுவ னுளுந் தெளிக - நிகழு
மறிவா னறிவோ டறிபடுவ பேத
முறுபரமான் மாவி லுருதே - யறிவின்
புருவாயொன் ருயஃ துறுவத னுற்றன்
னுருவாலே தானொளிரு மோர்க - வுருவுள்ளே
யான்மா வெனுமவ் வரணியி லிவ்வித
மான்மத் தியான வகமதனந் - தான்முயன்று
சந்ததஞ் செய்தலாற் சார்ஞானத் தீமடமை
யிந்தனமெல் லாமெரிக்கு மேயெறிக்க - முந்து
மருணனு லேயல் லகலுதல் போன்முன்
மருவறி வாலம் மடமை - யிரியவே

பொங்குமான் மாபரி பூரண மாகவே
பொங்குமா தித்தனைப் போலவே - மங்கலிலா
வான்மாவெப் போது மடைந்துள்தே யானுளுந்
தான்மடமை யாலடையா தாயமரு - மான்மடிய
வெய்தப்பெற் றூற்போ லிலகுந்தன் கண்டவணி
யெய்தப்பெற் றூற்போல வேயென்று - மெய்தும்
பிரமத்திற் சீவன் பிராந்தியாற் கட்டை
புருடன்போற் கற்பிதன் பொய்யா - முருவத்தின்
றத்துவம் யாதென்று தானுணரி னவ்வுருவம்
வத்துவா காது மதியுள்ள - வத்துவாந்
தத்துவசொ ரூபானு பூதியாற் றூனுதி
யுத்தம ஞான முடனேயம் - மித்தையா
னானென தஞ் ஞான நசிப்பிக்குந் திக்பிரமை
பானுவுத யத்தென்வே பார்க்கவே - தானொளிரு
நன்று தனையறிவின் ஞானியாம் யோகியு
மொன்றுமெலாந் தன்னி லுறுவதை - யொன்றூன
தானெல்லா மாயுள்தைத் தன்ஞானக் கண்ணினூற்
றூன்காண்ப னென்றே தரிபரி - பூன்றமா

மான்மாவே யிவ்வுலகெல் லாமாகு மற்பமு
மான்மாவுக் கன்னிய மாயில்லை - யான்மாவாய்க்
காண்பனெல் லாமுங் கடாதிகள்மண் ணின்வேறாய்க்
காண்பது முண்டோ கழறுக - காண்குறுஞ்
சீவன்முக் தன்வித்வான் றேருவதன் முன்றன்னை
மேவு முபாதிகுணம் விட்டனே - மேவுவான்
றன்னுருசச் சித்தின்மைத் தான்கீடம் வண்டினுருத்
தன்னையுறல் போலத் தரிதாள - மன்னுமவன்
மோகக் கடல்கடந்து மூளாசை கோபமுத
லாகு மரக்க ரறக்கொன்று - யோகி
யமைதி யொடுகூடி யான்மாவி னின்பத்
தமைந்தொளிர்வ னென்றே யறிவார் - யமைவி
லகித்தவெளி யின்பிச்சை யற்றுள யான்மா
தனின்பிற் றிருத்தி தனையுற் - றனிசமுந்
தன்னொளி யாற்குடந் தன்னுள் விளக்கெனத்
தன்னுளே தாளொளிர்வன் றுகை - மன்னு
மூபாதியுற் றனே னுமொட்டாவின் போலவ்
வுபாதிதரு மங்களோ டொட்டா - னுபாதியிலான்

முற்றறிவ னென்னுமுனி மூடனென வாயுபோற்
பற்றற்றுச் சஞ்சரிப்பான் பாரிற் - பற்று
முபாதிநா சத்தா லுறுவான் முனிவ
னுபாதியில் விஷ்ணுவி னுள்ளே - யபேதமே
தோயத்திற் றேயமுந் தூவிண்ணி லேவிண்ணுந்
தீயிற்றீ யும்போலத் தேர்வாய் - தூயதா
மெவ்வடை விற்பிறி தேதுமடை தற்கின்றே
வெவ்வின்பி னிற்பிறி தின்பின்றே - வெவ்வறிவு
தன்னிற் பிறிதறிவு தானின்றா மோவது
தன்னைப் பிரமமெனச் சார்ந்திடுக - பின்னு
மெதுகாணக் காண்டற் கெதுவுமே யின்றே
வெதுவான பின்சன்ம மின்றே - வெதுவறிந்த
பின்னறியத் தக்க பிறிதோர் பொருளின்றே
வன்னது தான்பிரம மாகுமே - யின்னு
மெதுகுறுக்கு மேல்கீழா மெங்குநிறை வாகு
மெதுசச்சித் தின்பிரண் டில்ல - தெதனந்தம்
நித்தமா யொன்றாய் நிகழ்வதெது வாகுமவ்
வத்து பிரம மதித்திடுநீ - நித்தமா

மேதழிவில் லாத தெதையன்றென் றன்றென்றே
வேத முடிவு விளக்கிடும் - யாதொன்
றகண்டவின் பாகி யமரும்மது தானே
திக்ழும் பிரமந் தெளிக - புகலவ்
வகண்ட சுகமய வான்மாவி லற்ப
சுகத்தை யடுத்தே சுரராய்த் - திகழும்
பிரமாதி யேனோர் பிறங்குவரின் புற்றுத்
தராதர மாகத் தரிப்பாய் - பரமா
மதனிடத் துள்ள தகிலமுஞ் செய்கை
யதையடுத் துள்ளதே யாகு - மதனற்
பரவிடு மெல்லாம் பரம்பொருள் பாலில்
விரவிடு நெய்போல வேயஃ - தருவம்
பருமையு நுண்மையுற் பத்தி விநாசங்
குறுகலு நீட்சியுங் கூடா - துருவங்
குணங்குல நாமமுங் கொள்ளாம லுள்ள
துணர்க பிரமமென் றுற்றுள் - ளுணர்வா
மெதனொளியி னொலொளிரு மேயிரவி யாதி
யெதனை யவையொளிர்க்க வேலா - ததனாலே

யிந்தவுல கெல்லா மிலகு மதுதானே
யந்தப் பிரம மறிந்திடுக - வுந்தி
யொளிர்த்துலக மெல்லாந்தா னுள்வெளிவி யாபித்
தொளிர்ந்திடு மப்பிரம மோர்வா - யொளிரு
நெருப்பினிற் காய்ந்தங்கி நேரொளிரு மந்த
விருப்புண்டை யைப்போல வேதா - னிருக்கும்
பிரம மூலகிற் பிறிதாகு மந்தப்
பிரமத் தணுவில் பிறிதாய்ப் - பிரமத்திற்
கன்னிய மேது மவிர்ந்தா லதுமித்தை
யுன்னுக கானனீ ரொத்ததனே - முன்னி
லெதுவெது காணவுங் கேட்கவு மேயு
மதுபிரமத் தன்னிய மாகா - ததுவுமே
தத்துவஞா னத்தினாற் சச்சிதா னந்தமா
மத்துவி தப்பிரம மாமறிக - வொத்தே
சருவத்துஞ் சார்ந்ததாஞ் சச்சிதா னந்தப்
பிரமத்தை ஞானக்கண் பெற்றான் - றரிசிப்பான்
ஞானக்கண் ணில்லாதா னண்ணனே காட்சியொளிர்
பானுவ்வையந் தன்போலப் பார்மூட - னேனுஞ்

சிரவண மாதிகளாற் றேசுறு ஞான
வெரியினிற் காய்ச்சி யெடுக்கச் - சருவ
மலமும்போய்ச் சீவன் மறுவில்பொன் போனிர்
மலனுகித் தானெளிர் வானே - யிலகு
மிதய்வெளி தோன்றி யிருளையழி ஞான
வுதயரவி யான்மா வொளிரு ‡ நிதமுமே
யெல்லாவற் றும்பரவி யெல்லாமுந் தாங்கிநின்
றெல்லா மொளிர்விக்கு மெண்ணுக - பல்லாற்றுந்
திக்கிடங் காலமுத றேடாம லென்றுமெத்
திக்குமார்ந் தேகுளிர்முன் றீர்ப்பதா - யெக்களங்கு
மற்றநித் யானந்த வான்மதீர்த் தத்துட்டோய்
வுற்றவ ஞர்செய்கை யொன்றின்றி - மற்றவன்
யாவு மறிந்தோனு யெங்குநிறைந் தாரமிர்த்
ஞவ னெனவே யறி.

முற்றிற்று.

# ஏகான்மவிவேகம்

## பாயிரம்

ஈண்டருளான் முன்னளித்த வேகான்ம பஞ்சகத்தை
யாண்டரம ணாசானே யாக்கினான்—மீண்டுமெய்
யன்பரோ தற்குதவி யாக விவேகமெனு
நன்கலிவெண் பாவா நயந்து.

## நூல்

### கலிவெண்பா

தன்னை மறந்து தனுவேதா னென்றெண்ணி
யெண்ணில் பிறவி யெடுத்திறந்தி—தன்னை
யுணர்ந்துதா னாத லுலகசஞ் சாரக்
கனவின் விழித்தலே காண்க—வனவரதந்
தானிருந்துந் தானாகத் தன்னைத்தா னென்னவன்
யானிருக்குந் தான மெதுவெனக்கேட்—பானுக்கு

யானெவ னெவ்விடம் யானுள னென்றமது
பானனை யிடு பகர்சச்சித்—தானந்தத்
தன்னுட் டனுவிருக்கத் தானச் சடவுடலந்
தன்னு ளிருப்பதாத் தானுன்னு—மன்னவன்
சித்திரத்தி னுள்ளுளதச் சித்திரத்துக் காதார
வத்திர மென்றெண்ணு வான்போல்வான்-வத்துவாம்
பொன்னுக்கு வேறாகப் பூடண முள்ளதோ
தன்னை விடுத்துத் தனுவேது—தன்னைத்
தனுவென்பா னஞ்ஞானி தானாகக் கொள்வான்
றனையறிந்த ஞானி தரிப்பாய்—தனதொளியா
லெப்போது முள்ளுகவ் வேகான்ம வத்துவே
யப்போதவ் வத்துவை [illegible]—செப்பாது
செப்பித் தெ[illegible] ரே[illegible]வர்
செப்பித் தெரிவிப்ப[illegible] செப்பு


ஏகான்மவிவேகம்

முற்றிற்று.

